உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# ஆதி சிதம்பர மென்
# தில்லைவளாகப்
# பதிற்றுப்பத்தந்தாதி





1939.




உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# ஆதிசிதம்பர மென்கிற தில்லைவளாகப்

# பதிற்றுப்பத்தந்தாதி

இது

கோட்டாறு தசாவதானி

ஸ்ரீ. P. ஆறுமுகம் பிள்ளை அவர்களால்

இயற்றப்பெற்று

காரைக்குடி க. முத்துப்பட்டணம்.

திருமிகு

பெரி. நா. நா. வகை

மெ. கண்ணப்ப செட்டியார்

அவர்களால்

காரைக்குடி செட்டிநாடு பிரஸில்

அச்சிட்டு வெளியிடப்பெற்றது.

பிரமாதிஸ்ரீ ஐப்பசிமீ 9௨

1939

1939 -

உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.




தோற்றந் துடியதனில் தோயுந் திதியமைப்பில்
சாற்றியிடும் அங்கியிலே சங்காரம் — ஊற்றமாய்
ஊன்று மலர்ப்பதத்தே உற்றதிரோ தம்முத்தி
நான்ற மலர்ப்பதத்தே நாடு.

(படைத்தல். காத்தல். அழித்தல். மறைத்தல். அருளல்)

## தில்லைவளாகம் நடராஜமூர்த்தி.

சிவமயம்.

# முகவுரை.

---

சிவநேசச் செல்வர்,
(சேவு. மே. மெய்யப்ப செட்டியார்.)

சீர்வளர் தில்லைவளாகம் பார்புகழ் பண்புடைத்து. அப்பெருந் தலத்தையே ஆதிசிதம்பரமென அனைவரும் கூறுகின்றார்கள். ஆங்கு அம்மை சிவகாமவல்லியார் கண்டின்புற அப்பன் நடராஜ ராஜவள்ளல் உலக இயக்கத்திற்கு முதற்காரணமாக உள்ள ஐந்தொழில் ஆட்டத்தைச் செய்தருளுகின்றார். அஃதெவ்வாறெனில் உலக முதல்வனாகிய சர்வேஸ்வரன் ஆன்மாக்களை அவரவர்கள் செய்த நல்வினை, தீவினைக்குத் தக்கவாறு படைத்துக், காத்து, அழித்து, மறைத்து, அருளி, அழியாத பெரும் சுகத்தைச் செய்கின்றார். இப்பெரு விளக்கமாம் உண்மைத் தத்துவமே நடராஜ மூர்த்தியின் சிறப்பிலக்கணமாகும். இவ்வுயரிய உண்மைக் கருத்தையே இந்நூலாசிரியரும்

படைத்தளித் தழித்து மறைத்தருள் செய்யும்
பான்மைசேர் ஐந்தொழி லினைக்கை
உடைத்தனித் துடியில் அமைப்பினிற் றீயில்
ஊன்றலில் எடுத்தலிற் காலே
நடைப்படக் குறித்துக் காட்டிய நடன
நாயகன் றில்லைமா வனமாம்
இடத்தினிற் சென்று நடனங்கண் டின்பம்
இசைகுவீர் யாவருந் தாமே.

என்னும் பொருள் நிறைந்த பாவால் நன்கு விளக்குகின்றது, குறிப்பிடத் தக்கதாகும். இப்பெருமை மிகக

தத்துவாதீத மூர்த்தியாகிய நடராஜப் பெருமான் கோவில் கொண்டருளும் நமது ஆதி சிதம்பரமாம் தில்லைவளாக க்ஷேத்திரத்தின் பெருமைகளைத் தலபுராண வாயிலாக ஒவ்வொருவரும் அறிந்து கொள்ள வேண்டியது பிறவிப் பயனாகும். இப்பிறவிப்பயன் ஓர்ந்து தில்லைவளாகத்தில் திருநடனம் புரிகின்ற நம் நடராஜ ராஜ வள்ளலார் மீது சேரநாட்டில் தனவணிகர் வழிபடும் குலதெய்வமாம் மரகத விநாயகர் கோவில் கொண்டருளும் கோட்டாற்றின்கண் வாழ்பவரும், திருவிதாங்கூர் அரசாங்க இந்து மதப் பிரசாரகருமாகிய தசாவதானி பி. ஆறுமுகம்பிள்ளை அவர்கள் உள்ளன்புடன் தில்லைவளாகப் பதிற்றுப்பத்தந்தாதி யென ஒரு பிரபந்தம் பாடியுள்ளார். இப்புலவர் பக்திப் பெருக்கால் பாடிய பதிற்றுப்பத்தந்தாதி நூறு பாக்களும் பக்திரசமும், சொற்சுவை, பொருட் சுவைகளும் பொதுளி மழலைச் சொற்கள் விரவி மிளிர்கின்றன. சில செய்யுட்கள் மூர்த்தி தத்துவத்தையும் சில பாக்கள் ஸ்தல விபரங்களை யும், சில கவிகள் நீதிகளையும் சில பாடல்கள் தில்லைவளாகம் திருப்பணியாளர்கள் உண்மை விளக்கத்தையும், அழகாகக் குறிப்பிடுகிறது. இது செய்யுட்களைப் படிப்போர்க்கு நன்கு விளங்கும். இந்நூலாசிரியரான சேரநாட்டுப்புலவர் ஆறு முகம்பிள்ளை அவர்களைக்கொண்டு தில்லைவளாகத் திருப் பணிச் செல்வர் உயர்திரு பெரி. நா. நா. அண்ணாமலைச் செட்டியாரவர்கள் பாடச்செய்த இப்பிரபந்தத்தை மேற் படி உயர்திரு பெரி. நா. நா. மெ. கண்ணப்பச் செட்டியா ரவர்கள் அச்சிட்டு வெளிப்படுத்திப் புலவரையும் கண்ணி யத்துடன் ஆதரித்ததானது, நமது சைவ முதல்வரும் தம்பிரான் தோழருமான ஸ்ரீ சுந்தரமூர்த்தி சுவாமிகளை

நமது சோழ நன்னாட்டுத் தலைநகராம் திருவாரூரிலிருந்து சேரநன்னாட்டரசர் நமது ஸ்ரீ சேரமான் பெருமாள் நாயனார் தனது நாட்டு மகோதைப்பதியாம் திருவஞ்சைக் களத்துக்கு அழைத்து உபசரித்துப் பதிகம் பாடச்செய்து மகிழ்வித்தமைக்கு ஒப்பாகும். இவ்விரண்டிற்கும் ஸ்ரீ நடராஜ ராஜ வள்ளலாரே மூலகாரணமாக நின்றருளுகின்றார்.

நடராஜ மூர்த்தியின் திருவருட் பெருக்கால் தில்லை வளாகம் நடராஜர் திருப்பணியும் இராமநாதபுரம் ஜில்லா காரைக்குடி முத்துப்பட்டணம்உயர்திரு பெரி. நா.நா.குடும்பத்தாரின் பெரும் பொருளாலும், உள்ளன்பு மிக்க பக்திப் பெருக்காலும், சிரத்தையாகத் திருப்பணி செய்யப்பெற்றது. கோவிலின் நித்திய நைமித்தியங்களையும் சிவாகம விதிப்படி தவறாது சிறப்பாக அவர்கள் குடும்பப் பொதுவிலிருந்து கண்ணுங் கருத்துமாக நடத்தி அவர்கள் பரம்பரை மானேஜ்மெண்டுக் கோவிலாக நடைமுறைகளைச் செய்து கொண்டு வருவது போற்றதக்கதாகும். இவர்கள் தில்லை வளாகச் க்ஷேத்திரத்திற்கு சென்ற 1938 ஆம் வருஷம் தலபுராண வசனமொன்று உயரிய முறையில் அழகாக அச்சிட்டு வெளிப்படுத்தியுள்ளார்கள். இவ்வாண்டில் பாட்டிற்குருகும் பரம்பொருளாகிய நடராஜ ராஜ வள்ளலார்க்கு மனமுவக்க பதிற்றுப்பத்தந்தாதி பாடச் செய்து வெளிப்படுத்தியிருக்கிறார்கள். இப்புத்தக வெளியீட்டினால், இவர்கள் பக்திப் பெருக்கமும், தமிழபிமானமும் புலவர்களைப் பேணல் ஆகிய அருங்குணங்களும், தில்லை வளாக க்ஷேத்திரத்தினிடத்து உள்ளன்போடுகூடிய அபிமானமும், அங்கை நெல்லிபோல் நன்கு விளக்குகின்றது.

மேலும் இப்பதிற்றுப்பத்தந்தாதியின் செய்யுட்கள் யாவும் திராக்ஷ கதலிபாகம் உடையதாய் செம்பாகமாகப் படிப் போர் உளமினிக்கும் உயர்வையும், தன்னை இறவாத இன்ப அன்புடன் வழிபடும் பேரடியார்களுக்கு தாயினு மினியனாய் ஆண்டவனருளும் பெருமையையும் இந்நூலில் பல இடங்களிலும் காணலாம். உதாரணமாக ஒரு பாசுரம் மட்டும் குறிப்பிடுகிறேன்.

வாயினிக்கும் நாவினிக்கும் வாழ்த்து மனமினிக்கும்
ஆயினிக்குங் கண்டு மயிர்தழும்பின் னிட்டோட
தாயினிக்கு மேலாந் தயவுடையான் காரைக்கால்
பேயினுக்கா யாடுநில்லை பெம்மானை பேசிடினே,

இச்செய்யுளின் முடிந்த முடிபசம் நடராஜனைப் பேசும்பேச் சினல் நமக்கு சகல சுகமுமுண்டு என்பது வெள்ளிடை. இதையே நமது சொல் வேந்தரும் "பெரும்பற்றப் புலியூ ரானைப்பேசாத நாளெல்லாம் பிறவா நாளே" என்று கூறி அவனைப்பேசும் நாள்தான் நாம் பிறந்தனுளாகு மென்றும், ஒவ்வொருநாளும் அவனது நாமத்தைச் சொல்லியே நாம் புனிதமடைய வேண்டுமென்றும் வலியுறுத்தினர். அவனைப் பேசுவதற்கு அரிய சாதனம் செய்யுட்களேயாகும். இதற்கு அனுகூலமாகவே நமது தில்லைவளாகம் ஸ்ரீ நட ராஜ மூர்த்தியின் பதிற்றுப்பத்தந்தாதி அமைந்துளது. இதை அனைவரும் தங்கள் பூஜையிலும் ஆராய்ச்சியிலும் வைத்துப் படித்து மகிழ வேண்டியது கடமையாகும். இதை மாணவர்களுக்கும் கற்பிப்பது மிக நலமாகும். இந்நூலைப் பாடியவர்களும், சிவஞான போத அதிகரண வெண்பா, சேரமண்டலச் சதகம், முதலிய நூலாசிரியரு

மான செந்தமிழ்ப் புலவர் ஸ்ரீ ஆறுமுகம் பிள்ளை அவர்களும் இதை வெளியிட்ட திருப்பணிச் செல்வர் பரம்பரை வழித்தோன்றல்களான பணியாளர்களும் நிர்வாகஸ்தரு மாகிய உயர்திரு பெரி. நா. நா. வகை மெ. கண்ணப்ப செட்டியாரவர்கள் முதலிய அனைவர்களும், ஆதி சிதம்பர மென்னும் தில்லைவளாகத் திருக்கோவிலில் திருநடனம் புரியும் சிவகாமி நாதராகிய நடராஜ மூர்த்தியின் பேரருளால் தீர்க்காயுளும் புத்திர சந்தானாதி பல்வகை நலனும் புகழும் செல்வமும் பெற்று வாழ்வார்களாக.

சுபம். சுபம். சுபம்.



## வாழ்த்து.

### கலி விருத்தம்.

வாழ்க நல்லறம் வாழ்கவிந் நூலுமே
வாழ்க பாடப்பெற் றோனடி மன்னியே
வாழ்க செய்வித்தோர் வாழ்க படித்தவர்
வாழ்க கேட்டவர் வாழ்க விவ்வையமே.

சுபம்.



தருக்க சங்கிரக தீபிகை அரும் பொருள் விளக்க மொழி
பெயர்ப்பாளரான ஸ்ரீ கோவிலூர் ஆதீனம் திருவண்ணாமலை
ஈசானிய மடம்

**ஸ்ரீலஸ்ரீ சி. சுப்பையா சுவாமி அவர்கள்**

இயற்றிய சாற்றுக் கவி.

—*—

ஆறு சீர் விருத்தம்.

அருள்விரவு சிவகாமி அம்மையொடு
ஐந்தொழிலும் அமையச் செய்யும்
தெருள்விரவு நடராஜர் தில்லைவளா
கத்திலமர் திருத்தாள் போற்றி
பொருள்விரவு பதிற்றுப்பத் தந்தாதி
புலங்குளிர பொறித்துத் தந்தான்
திருவிதங்கோட்டரசாங்கத் திந்துமதப்
பிரசாரம் திருந்தச் செய்வோன்

ஆகமத்தின் கருத்ததனை அறைந்தானே
நீதிதனை அழகாக் கோத்து
வேகமுடன் விளம்பினனே உருக்கமொடும்
பத்திதனை விரித்திட் டானே
போகமுறும் உயிர்களையே நடராஜர்
திருவடிக்கே போக்கி னானே
பாகமொடுந் தில்லையினைப் பாடினனே
யாதினையே பகர்வலம்மா.

கோட்டாற்று வளநகரிற் குணநடையின்
மாரிபொழி கொண்டல் போல்வான்
கேட்டாரு மதிசயிக்க கதாவதா
னஞ்செய்யும் கேண்மை யாளன்
தோட்டார்வெண் மலர்மகளை நாவுடைய
நான்முகனும் தொழும் வேலோனை
பாட்டாரு நாவுடையான் ஆறுமுகம்
பிள்ளையெனும் பாவல் லோனே.

—

உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# ஆதி சிதம்பர மென்கிற
# தில்லை வளாகப்
# பதிற்றுப்பத்தந்தாதி.

—*—

## விநாயகர் காப்பு

### வெண்பா

வண்மைமிகு தில்லை வளாகத்தார்க் கன்புதரும்
உண்மைமிகு அந்தாதி ஓதவே—திண்மை
ஒருகொம் பிருசெவிமூ யொண்முமத நால்வாய்
கருதைங் கரத்தானே காப்பு.

## தல விநாயகர் துதி

### கலி விருத்தம்

நித்த னாதி சிதம்பர னின்மலன்
சுத்த மாநடந் தோத்திரித் தேத்திட
பத்தி யாகப் பணிகுதும் பாவருள்
சித்தி யானைதன் செய்யபொற் பாதமே.

## நடராஜர் வணக்கம்

### அறுசீர் விருத்தம்

உன்னரிய பேரின்ப முயிர்களெலாம்
அனுபவிக்க ஓது வேதன்
பன்னும்அரி பரனிவர்கள் பார்க்குமவர்
தொழிலதனின் பயன்கொண் டாட
மன்னுசிவ காமியொடு மக்களுங்கண்
டதிசயிக்க வருமி ராமர்
துனனிருவர் பணிந்துய்ய சோதியருள்
நடனமதை தொழுது வாழ்வாம்.

## இராமர் வணக்கம்

### இதுவுமது

கோசலநன் னாடிரிந்து கொடுங்கானம்
வரும்பொழுது குடும்பத் தோடு
பேசரிய ஆதிசிதம் பரத்தினிலே
நடமாடும் பெருமான் றன்னை
பூசனைசெய் தருள்பெற்றுப் போயரக்கர்
குலமாள போர்செய் தற்ற
ஆசையொடு திரும்பவுவந் தடிபணிந்த
இராமரையாம் அகத்துள் வைப்பாம்.

## அவையடக்கம்

### வெண்பா

புல்லர்களே யாயிடினும் போற்றுவரா கிற்சிவனை
நல்லர்களா கிக்கதியை நண்ணிடுவர்—சொல்லுபொருட்(கு)
அந்நியனே ஆயிடினும் ஆய்வுடையார் கல்லடியை
உன்னுவதால் நற்பொருளிங் குண்டு.

உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# ஆதி சிதம்பரமென்கிற தில்லைவளாகப் பதிற்றுப்பத்தந்தாதி.

—✻—

## நூல்.

### கட்டளைக் கலித்துறை.

சீருஞ் சிறப்புந் திருவும் வரம்புகழ் சேர்ந்திலகு
பேருந் திகழ்ந்து பெருகும் விசும்பின் பிறங்குபலா
வாருஞ் சுளையினை கிள்ளைகண் டாசித் தருந்திமனந்
தேரு மொருதிருத் தில்லைவ ளாகத்தன் சீர்சொலினே 1

சொல்லினும் அன்பர் துதிசே ருளத்தினுந் தொண்டினினும்
நல்லவை தன்னினும் ஞாய நடுவினும் நன்புசெயும்
புல்லிய னாயவென் னாவினுங் கங்கைப் புரிசடையோன்
மல்லலந் தில்லைவ ளாகத்தி னும்போய் மருவுவனே 2

மருவாருங் கொன்றையில் வாடிய வேனும் மலருருவில்
உருவாரப் பூசும் கலவய தேனும் உயர்தென்னைகள்
திருவாருந் தில்லைவ ளாகத்தன் சீர்கொளும் சேவடிக்கே
அருவாரும் மெல்லிடை கேட்டன ளாமென் றறையளியே 3

அளியாரும் பூம்பொழில் தில்லைவ ளாகத் தணைந்துதினம்
ஒளியாரும் நீற்றனின் பேரினில் ஒன்றை உறுதியுடன்
களியாரச் சொல்லித் துதிசெயின் நீர்செய்த கன்மமும்போய்
குளிராருங் கற்பகச் சோலைப னற்பதங் கூடிடுமே. 4

கூடிய நல்லின்ப வாழ்வுங் கொடையுநால் கூறுமன்பால்
தேடிய ஞானமுங் கல்வியும் செல்வமுஞ் சேருமிசை
பாடிய அன்பர்க்குப் பாக்கிய மீயும் பரமனைச்சென்
றூடிய சீரடி தில்லைவ ளாகத் தருச்சியுமே. 5

அருவாயும் பத்தர்கள் வேண்டிய வாறங் கருளுதற்கே
உருவாயும் மற்றை உபயமு மாக ஒளிருமவன்
திருவாருஞ் சோலைகொள் தில்லைவ ளாகத்துச்சேர்ந்துதினம்
மருவா தவர்பல யோனியிற் போகி மருவுவரே. 6

மருவுவர் பூசிப்பர் யோகமுஞ் செய்வர் வணங்குவர்கல்
பொருவுநற் றேரிடை பல்லக்கில் ஏற்றி பொறுப்பரன்பர்
திருவுயர் கோலத்தில் செல்குவர் காமிந்தச் சீலம்விட்டால்
உருவுயர் தில்லைவ ளாகத்தன் பாதத் துறவதென்றே. 7

உறுவதும் ஞானிகள் உள்ளத்தில் சென்றே உவந்துதுதி
பெறுவதும் தில்லைவ ளாகத்தன் என்றுபல் பேச்சினிலும்
நிறுவிமெய் யன்பர்க டுன்பந் தொடைத்து நிகழ்வதுவும்
சிறுழ்வலி யானையன் தாதை அடியென எண்ணுவமே. 8

என்னமுஞ் சிலமும் யோகமும் சொல்லும் இசையுடனே
பன்னமைத் தேத்துநற் பாட்டும் வணக்கமு பாவனையும்
நன்னிய செய்கையும் தில்லைவ ளாகத்தன் நன்மைமிகு
புண்ணிய நல்லடிக் கென்றே கலைகள் புகன்றிடுமே. 9

புகலுற்ற பாட்டளி பண்டனை கேட்டலும் பூரித்துநெஞ்
சகலுற்று மஞ்ஞைகள் ஆடுதல் கண்டே அணிவனப்பெண்
நகலுற்ற தாமெனும் முல்லைசூழ் தில்லைவ ளாகநண்ணி
இகலற்றுப் பாடுதல் கேடுத லாநம் எழிற்றவமே. 10

## முடுகுக் கோச்சகம்

எழிலாருநற் கமுகம்பழம் வாழைக்கனி இடையே
ஒழியாதுற ஒழுகுந்நற வோடிப்பயி ரோங்கும்
பொழிலாருதன் வயற்றில்லைவ ளாகத்திடை போகி
பழியாவையுங் களைவீர்வரு வைகுண்டவன் பதமே 11

பதமேவரு மனமேசொலும் படியேநட பரிவோ
டிதமேமொழி களவேவிடு கொலைதவிர் இணையா
மதமேகளை யணிதில்லை வளாகத்தவ னடியே
நிதமேதொழு தொலையாவினை நில்லாதகன் றிடுமே 12

நில்லாதன நிலையென்றுணர் நிசப்புலை நெஞ்சே
பெல்லாததிப் புவியென்றுணர் போற்றும்அறி வுடைய
நல்லாரையும் மயக்கஞ்செயும் நனிதில்லைவ ளாகத்
தல்லார்களன் அடியேதொழ அனுகாமய ருனே 13

தானேபல செல்வங்களுந் தருவானரன் றானே
தேனேவளர் பொழிற்றில்லை வளாகத்திடை சென்றே
பானேருநன் மொழியாலவன் பண்பேசொலிப் பாடி
கோனேஎன துறுதாயக எனவேவணங் குவீரே. 14

வணங்கும்பல அடியார்களு மதியேமிகு புலவர்
கணங்கள்பல ஒருங்காகிய கழகங்களுங் கவினும்
மணங்கொள்பல தெருத்தில்லை வளாகத்தினிற் சென்றே
உணங்குந்தவச் செயலீர்உம துறுமாரருள் பெறுமே. 15

பெறும்பேறினி யாதொன்றென பேசின்மிகிவ் வுலகம்
வெறும்பொய்யெனநினைந்தேசிவன்மேலாம்பொருளெனவே
உறும்போதக மாகத்தில்லை வளாகத்திடை உற்றே
நறும்போதினி லருச்சித்தவன் நலதாம்அருள் கொளுமே 16

கொள்ளுந்நதி மதிசூடிய குழகன்அருள் பெறவே
உள்ளுந்தனி உலகீரவன் உமக்காவன தரவே
மள்ளர்பொலி வயற்றில்லை வளாகத்துறு கோவில்
வள்ளன்மையி னிருந்தான்பெருமறையோர் துதி சொலவே

துதிசெய்தவர் நதிசூடிய பரமனருள் துணையால்
கதியெய்துவர் நனிதில்லை வளாகமெனுங் காவற்
பதியெய்தியே சிவனார்திருப் பணிசெய்திடும் அடியார்
புதிதாய்வரு இன்பங்களும் போகங்களும் அடைவார். 18

அடையார்புரம் எரிசெய்தவன் அடியார்களுக்கடியான்
மடையார்தரு வயற்றில்லை வளாகத்தினிற் சென்றால்
நடைநேர்தரு மனஞ்சிர்தரு நட்பேமிகு மவன்றன்
புடைசேர்தரு விருப்பேவரும் புல்வீர்செலும் உடனே 19

புலமார்தரு வாழைப்பழம் பூமாங்கனி புதிதாம்
பலவின்கனி இவைகொண்டுநற் பாவாணர் தமக்கு
நலமார்தர உய்பித்திடும் நனிதில்லைவ ளாகத்
தலமாவதிற் போகிச்சரன் அடைவீர்தனி யடியீர். 20

## எழுசீர் விருத்தம்.

சரணநற் சரணம் எனுமொழி யடியார்
சாலுக்கல் லுளத்தினி லவர்கள்
உரனுற நினைத்த படியெழுந் தருளு
உமையொரு பாகனல் லூர்தான்
திருமணச் செயலின் னுறுமுழ வோசை
சேத்திரந் தனில்வணங் குனர்கள்
அரகர வோசை யோடெதிர் தில்லை
வளாகமென் றறைவர்மே லோரே. 21

மேலவர் புரங்கள் காத்திடற் கெடுத்த
விடைக்கொடி யுடையவன் மேனாள்
ஏலுநற் றவம்செய் யாதவ ரேனும்
யாரையும் ஆளுதற் குவந்து
நூலவர் வணங்கும் கோவில்கொண் டருளும்
நோன்மைசேர் அடியர்குழூர்தான்
வாலனங் குமுதத் துறங்கிடுந் தில்லை
வளாகமென் றுரைப்பர்மா மதியோர். 22

மதியென மொழிகோ மலரென மொழிகோ
மங்கையர் வதனநற் றனமே
நதியணி சடிலன் தில்லென மொழிகோ
நாமிதற் குரைப்பதென் னெனவே
பதிபெறு முனைர்வை பழியினு ளாக்கும்
பாவலீர் உமைப்புரந் திங்ஙன்
கதிதர வருவான் அமர்ந்திடுந் தில்லை
வளாகமே கருதமுள் ளினிலே 23

டுள்ளிலே ஒன்று வெளியிலே யொன்று
உரைத்துரைத் தூரினைக் கெடுக்கும்
கள்ளர்க ளோடுங் கலந்துமே நல்ல
காலத்தைக் கழிக்கின்ற கடையீர்
வள்ளல்சூழ் தில்லை வளாகத்திற் போகி
மதிச்சடை யுடையனை வணங்கி
தள்ளியவ் வினையை தவ்வரு ளொடுஞ்சீர்
சால்பெலா பெருகுவீர் தானே 24

தான்பெறுஞ் சுகமிவ் வையகம் பெற்றுச்
சாலுக வென்றபே ரடியார்
வான்பெரும் கயிலை நாதனை வணங்கி
வரம்பெறும் தில்லைவ ளாகத்
தான்பெரும் அடியை மனத்தகத் திருத்தி
சங்கடந் தமையெலாங் களைவீர்
ஊன்பெரும் வடிவே பொருளென மதித்து
உழலும்புல் லறிவையிங் குடையீர் 25

உடைமையு ளின்மை யிருந்தெதிர் கொள்ளா
துவர்த்தலென் றுளிர்மறை நவலம்
மடைமையைக் கடியுந் தில்லை வளாக
மாபெரும் பதியினை யடைந்தால்
உடையவர் உறவும் அடியவ ருறவும்
ஒருங்குகொண் டன்புடை யவர்தம்
கடமையு முணர்ந்து கொள்ளலாம் புலவீர்
கடிதுவந் தவணடைந் திடுமே. 26

அடைந்திடி ராமன் பலதலங் களினும்
அதிகமித் தலமென கொண்டுள்
உடைந்துடைந் துருகி பூசனை உஞற்றி
உயிர்தனக் குறுதியுற் றதுதான்
மடந்தையர் வதன மதிமருங் கோடி
மாகயல் குழைகளுற் றுலவ
குடைந்தெழுந் தடஞ்சூழ் தில்லைவ ளாகக்
கோயிலென் றுரைப்பர் நல்லோரே. 27

நல்லவர் தில்லைவ ளாகத்திற் சென்று
நடனவில் பொருண்மனத் தெண்ணி
அல்லைநேர் கண்டன் அடியிணை பூசை
ஆற்றியே அடியனேன் வருந்தும்
தொல்லைவந் தணுகா தருள்செய்வா யெங்கள்
சோதியே ஆதியே ஆதி
தில்லைநா யகனே என்றுகை தொழுதால்
சேருமே நலமெலாம் நமக்கே 28

நமக்கருள் செய்யும் நாதனே நல்ல
நீதனே போதனே வேதம்
சுமக்குமோர் சீத பாதனே தில்லை
தொல்வனந் தன்னில்வந் திருந்தான்
எமக்கினி என்னே குறையுறங் கேட்கும்
யாவையு நயந்தளித் திடுவான்
தமக்கெனச் செய்கையி லாதவன் உயிர்கள்
தம்பொருட் டுலகெலாம் படைத்தோன் 29

படைத்தளித் தழித்து மறைத்தருள் செய்யும்
பான்மைசேர் ஐந்தொழி லினுக்கை
உடைத்தனித் துடியில் அமைப்பினிற் றீயில்
ஊன்றலில் எடுத்தலிற் காலை
நடைப்படக் குறித்துக் காட்டிய நடன
நாயகன் தில்லைமா வனமாம்
இடத்தினில் சென்று நடனங்கண் டின்பம்
இசைகுவீர் யாவருந் தாமே. 30

## ஆறுசீர் விருத்தம்

யாவரும் புகழ்ந்து போற்றும் எங்கணா யகன்முன் னாளில்
தேவருக் கருளிச் செய்யுந் திருநடச் செயலை நல்ல
பாவருஞ் சொக்க லிங்கப் பண்ணவன் பணிசெய் துய்ந்த
காவரும் தில்லை சூழும் கானகங் காண லாமே, 31

காணுங்கண் ணுடை சிப்புக் கைப்பிடித் தேருங் கம்பும்
வீணுற நீக்கி வாழும் விருப்பரில் லாத தில்லை
ச்சணுறு வளாகஞ் சென்று திருநடம் பொலியக் கண்டால்
கோணுதி வினைக ளெல்லாங் குதிகுதித் தோடிப் போமே 32

மேழியும் பிறவுங் கொண்டு வியன்புலத் துழுத பின்னர்
காழிசம் பந்தர் பாடும் கவிநவல் கணக்கர் தாமே
வாழுநற் சீரார் தில்லை வளாகத்தில் வள்ளல் தாளை
தாழுற்று மனத்தா லேனும் சரணுற்றூர் சகமுற் றூரே. 33

உற்றவ உயிர்க ளெல்லா முடையவ னேனையு மாளப்
பெற்றவ அடியேனன்பை பேணுகாற்கனியாக்கொண்டாய்.
நற்றவர் வாழுந் தில்லை நல்வனத் திருந்து கும்பன்
பற்றினிற் செய்த பூசை பார்த்தருள் பரம போற்றி. 34

போற்றிநின் பாதம் தீய புலன்வழி செல்லா நல்லர்
ஆற்றிய பூசை கொண்டே அவர்க்கருள் அளிக்க வேசொல்
மாற்றமில் வளமார் தில்லை வளாகத்தில் கோவில் கொண்டே
வீற்றினி திருந்தா யாவி மேலினி லிருந்தாய் மாதோ. 35

மாதமர் புனிதத் தில்லை வளாகத்தி லடியர்க் காயப்
போதிலும் நடனஞ் செய்யும் போதகச் செல்வா வுன்னை
யாதுகொண் டடியே னுள்ளில் எவ்ணுகேன் நீயே என்னை
காதல்கொள் ளடிமை யாக்கிக் காத்திட வேவடுந் தானே

வேண்டுமே உனது போதார் மெய்ப்பதத் துறுமா ரன்பு
பூண்டுள முரிகி நாயேன் பூசைசெய் வினையுஞ் சீரே
ஈண்டிய உலகில் தோன்றும் எவ்வுயிர்ே றனு் பற்று
நீண்டநல் இரக்கந் தானும் நேர்தில்லை வளாகத் தானே. 37

தாயென ஆள்வாய் போற்றி தன்வயத் தன்மை போற்றி
தூயநல் லுடலோய்போற்றிசொல்லிய றுணர்வோய்போற்றி
வயமுற் றறிவோய் போற்றி இயல்பதா யழுக்கில் நீங்கும
சேயனே போற்றி தில்லைத் திருவனத் திருந்தோய் போற்றி.

இருந்தபேரருளாய் போற்றி, என்றைக்கு முடிவிலாற்றல்
திருந்தவே வுடையாய் போற்றி, செறுப்பிலா வின்பந்தானே
பொருந்திய முனிவா போற்றி, புதுமது தணிவண்டெல்லாம்
அருந்தித்தேவாரம்பாடுமணிதில்லை வனத்தாய் போற்றி.39

வனத்திருந் தாலும் மேரு மலையிருந் தாலுங் கெட்ட
மனத்தினி லியற்றும் பூசை மாபரன் பூசையாமோ
இனத்திருந் தாலும் மாத ரிடத்திருந் தாலுஞ் சுத்த
மனத்தினிற் செய்தாற் றில்லை வனத்தவன்பூசையாமே 40

## ஆறுசீர் நெடு விருத்தம்

மேன்மைமிகு அகத்தியனே முதலான
பலமுனிவர் விளங்கச் செய்த
பான்மைமிகு பூசைகொள பரமனெழுந்
தருளுமிடம் பாவோர் போற்றும்
கோன்மை முத்துப் பட்டணம்வாழ் பெரி,நாரா
யணவணிகர் கொடைச்செல்வத்தால்
நோன்மைமிகு திருப்பணிசெய் ஆதிசிதம்
பரமெனவே நுவல்வரம்மா. 41

மாயையினில் சிவலிங்கந் தன்னில்வரு
குருக்களினில் மன்னி நிற்பாய்
ஆயினல வாய்மையினில் ஆசார
மதனில்பெரு மருமை யான
தூயதுவாங் கொல்லாமை யினிலுறுவாய்
என்பதற்குத் தொடர்புஞ் சொல்வாய்
ஏயபெருந் தனித்தில்லை வளாகமதி
லிருமுனிவர்க் கிருங்கூத்தோயே. 42

கூத்துகந்த பெருவாழ்வே மலைவில்லாய்க்
குனித்தருளுங் கோமானேயென்
ஏத்துகந்து கொண்டருளும் எம்மானே
தில்லைவனத் திருந்த ஒன்றே
சீர்த்திஉள நல்லன்னை மலையெனும்பேர்
சீமானர் செய்து வைத்த
காத்திடுமுன் பணிமறவா திருப்பதற்கிங்
கருள்புரிவாய் கருணை வள்ளால் 43

கருணையுருக் கொண்டெழுந்த கடலேநல்
தில்லைவனம் காவல் கொண்ட
அருமையுறுங் கோவேயுன் அடியினுக்கே
பூசைசெயும் ஆக்கந் தானே
இருமையுஞ்செய் பேறெனக்கொன் டிருந்திலரேல்
ஈதன்முதலோரார்ந் தூற்ற
ஒருமைதரு நல்லறங்கள்உடையவராய்
ஆனாலும் உறுவ தென்னே. 44

என்னேயிவ் யுலகியற்கை சிலவருணை
எண்ணுதும் இருங்கல் ஞாலம்
பொன்னேயும் அரசாட்சி புரிகின்றார்
திருவருளைப் போற்றி போற்றி
நன்னேயமுடன் வாழும் அடியர்களும்
வறுமைபட நாணு கின்றார்
மன்னேதன் டில்லைவன மருந்தேயிங்
கிவைகளுக்காவ தூகூறுயோ. 45

கூறுமையாள் கொண்டபெருங் கோவேநல்
தில்லைவனங் கோவில் கொண்ட
ஏறுயர்த்த பெருவாழ்வே நாயடியேன்
இனியேனும் இடரின் நீங்கி

மாறில்புகழ் உனதடிபெற் றடியருடன்
மனமுவந்து வாழ வேதன்
ஆறுசடைக் காக்கியதோர் அன்புருவே
கருணைபுரிந் தருளுவாயே. 46

அருடானே ஒருருக்கொண் டமைந்துலகம்
அனைத்தினையும ஆக்கிக் காத்து
இருடானே நீங்கியுயிர் இளைப்பாறற்
கழித்தருளும் ஈவார்க் கென்றுந்
தெருடானே ஓங்காதி சிதம்பர! மெய்
கண்ணப்பச் சீமான்செய்த
பொருடானே நிறைந்தபணி போற்றுதல்போல்
பாடலருள் புரிகுவாயே. 47

புரிதனையும் வேள்தனையும் காலனையும்
புன்முறுவல் புரிந்தும் நெற்றி
எரிதருகண் டனைத்திறந்தாந் திருவடிகொண்
டெற்றியுமே இறுமாப் புற்றுத்
திரிதருமோர் மும்மலமுந் தெய்ந்தொழியும்
படிசெய்த தேவே தில்லை
அரிதருகா னகத்திருந்தோய் அகன்றிடுமுன்
முன்னெனதாம் அழுக்குத் தானே. 48

அழுக்கிருந்த பெத்தமதில் உனைமறந்து
நாயடியேன் அடாத செய்கை
இழுக்குடனே பலசெய்ய எண்ணுகின்றேன்
உனதருளோ டிசைந்து நின்று
விழுப்பொருளே உனைநினைக்கும் பொழுதத்து
மேலாகல் வினைசெய் கின்றேன்
பழுத்தசுவைக் கனியமுதே தில்லவனத்தோய்
நல்லருளே பாலிப்பாயே. 49

நல்லதுசெய் வியாழன்எதிர் தீக்கோள்கள்
செய்கொடிய நலித லெல்லாம்
இல்லதுவாய்ப் போயவர்க்கு இதம்வருமா
போலுனருள் இசையப் பெற்றால்
தொல்லைசெயும் கொடுங்குணங்கள் தொலைந்துநல
குணங்கள்பல தொடர்ந்து நன்மை
எல்லவும்வந் தெனைச்சூழ எழிலுறுவேன்
தில்லைவனத் திருந்த குன்றே. 50

## கலிநிலைத்துறை.

குன்ற மொப்பவர் குணத்தினால் கொடையினால் கொண்மூ
என்று மொப்பவர் என்றுகை தொழுதிடி ராமன்
கொன்ற ராவணக் கொலைப்பவக் கோதறச் செய்தான்
ஒன்று தில்லைவ ளாகத்தி னுடையநா யகனே. 51

நாய கத்திரு தில்லைமா வளாகத்தில் நண்ணி
தூய சிந்தைய னாய்ச்சுயஞ் சோதியி னாமம்
ஆய ஒன்றினை அன்புடன் அகமுறக் கொண்டால்
ஏய வெப்பிறப் பெய்தினும் இல்லையாம் நரகம் 52

இல்லை இலலையென் றெண்ணுக வறுமையிங் கெழிலார்
தில்லை நாயகன் பொன்னடி சேவைசெய் துயிர்கள்
தொல்லை நீங்குதன் பொருட்டினுஞ் செயல்களை தொடர்ந்து
நல்ல நல்வினை வியற்றியே நாடொறும் நடந்தால் 53

நடனக் தில்லைமா வளாகத்தில் நாயக நீமா
துடன தாகவே நடித்திடும் காரண முரைக்கின்
கடன தாகிய காலவந் துயிர்களுக் காங்கால்
திடன தாகவே அளித்துப்பின் செய்திடத் தானே. 54

செய்யு மாதவ மெவ்வள வேறினும் செயிர்சேர்
பொய்யி லாதவர் அடைவர்நின் போதையார் அடியே
தைய லார்பொலி தில்லைமா வனத்தினிற் சார்ந்தே
அய்ய நின்பதந் தொழுதிடிற் போமசத் தியமே. 55

போகும் வாளைமீன் எறியமா மரங்களிற் புதுத்தேன்
பாகு போலொழு கிடவதை பருகிய சுறவம்
வாகு சேர்புணை மறித்திடும் வாரிசூழ் தில்லைக்
கேகு வார்களுக் கிம்மையு மறுமையுஞ் சுகமே. 56

சுகங்கள் வாழ்தரு மருதமும் வாரியும் தொலையா
நகங்க ளுந்தனி முல்லையு நல்கிய பொருள்கள்
அகங்கு ளிர்ந்திட அனுபவிப் பார்கள்நல் லறமார்
மகங்கள் செய்ம்முதற் றில்லையில் வள்ளனிற் றொழுதோர் 57

தொழுதும்வாழ்த்தியும்எண்ணியும்போற்றி செய்தொண்டர்
குழுவு சூழ்முதற் றில்லையை கும்பிடிற் கோபம்
கழுது போல்வபி ருரவே உண்டபின் கருதும்
பொழுதுறுது செய் பூசணைப்பலனெனப் போமே. 58

பலமு மாய்பலன் தருவதோர் பணியுமாய் பலவாய்
நிலவு மொன்றதாய் நிட்களமாய் சகளமுமாய்
குலவு மீரளுடையதாய் குணியதாய் குணமாய்
வலிய தாகவும் நின்றனன் தில்லைமா வனத்தோன். 59

தில்லை மாவனந் திருந்தவே விருந்த பேரொளியே
நல்ல தெய்வாசன் பணிநயமதாய் கொண்டோய்
மல்லல் சேருமிப் பிரபந்தப் பணியையும் வாங்கி
தொல்லை தீர்த்தெனைப் பணித்திடு நினதடித் தொண்டே. 60

## கலிவிருத்தம்

தொண்டர் தம்மைத் தொடர்ந்திடும் சோதியே
அண்டரேத்த அவர்க்கருள் செய்யவோ
புண்ட ரீக புரத்தினி லானந்தங்
கொண்ட கூத்துகந் தாடிய கொள்கையே. 61

கொள்ளுங் கேவலத் திற்கிடங் கொண்டவென்
எள்ளல்தா னிரிக்தோடவித் தேகமாம்
கள்ளமாயச் சகலமுங் காட்டினாய்
வள்ளல் தில்லை வளாகத்து மாண்பனே. 62

மாணு நின்கழல் வந்து தொழுபவர்
பூணு மிந்திர போகந்துய்த் தப்புறம்
காணுங் காட்சி யிலாவிடங் கான்பரால்
தாணு தில்லை வளாகச் சதுரனே. 63

துரக நன்னரி யாக்கிய தூயனே
உலகந் தன்னை யளிக்க ஒளிர்சடை
பரம தில்லை வளாகப் பரதக்கூத் (து)
இரவு மெல்லும் மியற்றுவ தென்கொலோ. 64

என்ன வோபயன் எங்களுக் கென்றுளில்
உன்னில் உன்றன் உவக்கும் பரதத்தால்
பன்ன யங்கொளு மின்பம் பயக்குமால்
மன்னுந் தில்லை வனத்துறு வள்ளலே 65

வள்ள னீமணி மன்றினி லாடிய
விள்ளுங் கூத்தை விளங்க உணர்வரேல்
தள்ளு மூன்று மலமுந் தவிர்வரால்
பள்ள மார்கடல் தில்லைப் பரமனே. 66

பரமனே தில்லை பண்லவர் சோதியே
திரமதாகவென் சிந்தையுள் நின்றநற்
பிரமமே உன்றன் பேணிய நல்லடி
தருமநீழற்கண் சாருவதாகுமோ. 67

ஆடுந் தில்லை வனத்தமர் அண்ணலே
சோகமாகுந் துயர்தனை நீக்கியே
ஏகநாயக இன்பமரும்பெரும்
தாகந் தீரருள் தந்தெனை யாக்குவாய். 68

ஆக்கு வாயளிப் பாய் துடைப் பாயெமை
காக்கு மாறுன் கருணைதந் தாளுவாய்
பூக்குங் கொன்றையிற் பொன்சொரிந் தானந்தம்
தேக்குந் தில்லைவ ளாகத்துட் செய்யனே. 69

செய்யனே தில்லைச் சீர்வனமேவிய
ஐயனே எமை அஞ்சலென் றாளுவாய்
துய்யனே யடியார்க்குறும் துன்பெலாம்
உய்ய உன்னதா உற்றிடுந் தெய்வமே. 70

வஞ்சித்துறை

மேய நற்றுணை
ஏய தில்லையுள்
தூய னைத்தொழ
நோய தோடுமே. 71

ஓடுந் துன்பமெலாம்
நாடுந் தில்லையில்
பீடு சேர்பரன்
ஆடு தாள்தொழ. 72

தொழுது வாழ்த்துவீர்
பழுதில் தில்லையை
அழுத கண்களில்
எழுது வீர்மையே. 73

மையய மர்களன்
துய்ய தில்லையில்
வைய்யு மன்பினை
பொய்ய தோடுமே. 74

ஓடுந் தீவினை
கூடும் நல்வினை
பீடு தில்லையை
நேடு மன்பொடே. 75

அன்பி னூரு
இன்பமார் தில்லை
முன்பு கண்டிட
துன்ப மில்லையே. 76

இல்லை துன்பமே
நல்ல ராகுவீர்
தில்லை யானடி
வல்லை நோக்குமே. 77

நோக்கி னெற்றி
நோக்கி னானையே
நோக்கு தில்லையுள்
நோக்கி வாழுவீர். 78

வீடு சேர்த்திட
பாடு வீர்பரன்
பீடு சேர்கழல்
நாடு தில்லையே. 79

தில்லை தன்னிலே
எல்லி ராவினில்
புல்லு வார்க்குறும்
நல்ல தெய்வமே. 80

## எண்சீர் விருத்தம்

தெய்வமதைத் தேடலுறும் சிவஞானச் செயலீர்
சீர்தரவே கூறுவதைச் சிரத்தையொடுங் கேண்மின்
மைவளருங் கண்டத்தன் மன்னிடபத் துறுவன்
மாபூத மைந்தினொடு மதிவெயிலோனுன்மா
உய்வதுறிவ் வெட்டுவகை உடலோடுநல் லண்ட
உலகமெலாம் பரந்திருப்பன் உடையவிது மட்டோ
எய்தரிய தில்லைவனத் திடத்தினிற்போய் நடித்தே
எல்லார்க்குங் கதிகொடுத்தங் கிருப்பதுவுமியல்பே 81

இயல்புருவான் அறிவுருவான் இந்திரிய உருவான்
எங்குநிறை வுருவானம் மிதயமிசை யிருக்கும்
தயவுருவான் சந்நியாசத் தாருருவான் வணங்குஞ்
சனவுருவான் சரவசரந் தங்குருவா னெனினும்
உயவருநல் லன்பரெப்போ தெப்படியெந் நிலையில்
உன்னுவாரோ அப்படியே யுளவுருவா னுவன்
கயலுகளுந் தடம்பொழில்சூழ் தில்லைவன நடித்துக்
காட்டிநமை யவலவசஞ்செய் கடவுளுரு வானே 82

கடவுள்தனை காண்பதற்கு கருதியமண் ணைதனில்
கருத்துவைத்தேன் நீர்தனில்களிப்பினொடும்பார்த்தேன்
திடமுடன்வெந் தீயதனில் சென்றுமனங் கறுத்தேன்
சீற்றமொடுங் காற்றதனில் திரிந்துசுழன் றலுத்தேன்
படருருமிவ் வெளியதனிற் பார்த்துவெளி யானேன்
பார்ப்பரிய போதமதை பார்க்கு மயலானேன்
மடமையற ஐந்தொழில்செய் நடராஜர் தில்லை
வளாகமதிற் பரனிலைமை மகிழ்ந்திடக் கண்டேனே. 83

மகிழ்ந்திடவே வேண்டுமென மதித்திடுமிவ் வுலகீர்
மனமதனை புலவழியே வழங்குவதை மறுத்தே
திகழ்ந்திடுநல் லறிவின்வழி செலுத்திடுவீர் ஆதி
சிதம்பரத்தில் திருநடனஞ் செய்யு நடராஜன்
இகழ்ந்திடுவெந் தசமுகனை இடருறுத்தி உலகை
இசமுறுத்தும் ராமபிரான் பூசனைக ளேற்று
புகழ்ந்திடுநல் வரங்களெலாம் போற்றிடவே கொடுத்தோன்
புண்ணியமார் பூங்கழல்கள் புரிந்துநினைத் திடுமே. 84

நினைந்துநினைந் துணர்ந்துணர்ந்து நேயமொடும் பார்த்தும்
நிபுணரினன் னிலையறிய நெடுங்கால முழைத்தும்
வனைந்திடுதற் குரியரலர் மாற்றமிக வுடையர்
மன்னிடுதற்கிடங்கொடுக்கும் வண்மையிலா ரெனினும்
கனிந்துகனிந் துருகிமனங் கசட்டு நிலையழியில்
கண்டுமனங் களித்திடற்கே உண்டுமவ ரியல்பே
புனைந்திடுநல் வளமுடைய ஆதிசிதம் பரமாம்
புரியதனிலானந்தம் புலத்திலுக் கின்றாரே. 85

ஈந்தபொருள் புல்லெனினும் இசைவுடன்கொண் டவரின்
ஏற்றமதற் கேற்றபடி எழிற்பலன்கொள் ளுவரால்
வேந்தர்வரு தில்லைவளா கத்திருந்த விமலன்
மேவுதற்கே கற்கோவில் விருப்பினொடு மியற்றும்

மாந்தர்களில் தலைசிறந்த சொக்கலிங்க ஐடா
வளமுறுநா ராயணமன் வாழ்வுமிகு குலத்தோர்
எந்துபுகழ் செல்வமெலா இம்மையிலே பெறுவர்
இன்புறுவர் மறுமையிலே எய்தரிய பொருளால் 87

அரியபொருள் உலகினுக்கிங் காதி நடராஜன்
ஆவனெனப் பெரியர்களும் அறைந்திடு காரணந்தான்
பெரியதொரு மாயையினை உயிரினிடை யிருந்து
பிரித்திடவே உடுக்கதனை பேணுகரத் தெடுத்தான்
எரியதனல் வினையதனை எரியுறவே செய்தான்
எடுத்தவொரு காலினிற்பே ரின்பமுறத் தினனால்
உரியவரும் ஆணவத்தை ஊன்றிடு காலமுக்கி
உறுமாதி சிதம்பரத்தே ஓங்கருள்செய் தனனே. 87

செய்யணிகொள் சீகாழி திருஞான முனிவர்
திருநாவுக் கரசர்நல திருத்தொண்ட தொகையார்
உய்யவரும் பெரியவர்கள் உரைத்திடுபாட் டேற்ற
உயரிடும்பை மறைவனங்கோட்டூரு திருக்களரே
துய்ய மணிவாசகர்போய் துலக்குபெருந் துறையே
தொடர்ந்திடச்சூழ் தில்லைவளா கத்திலுறுங் கோவில்
நெய்யணிகொள் ஆயிரமார் விளக்கினுக்கு நடுவே
நேயநட மியற்றினரென் நெடுந்துதிகொள்ளுவரே 88

கொள்ளுதனின் னருளெனினுங் குறித்திடு பாட்டினுக்கே
குடும்பமெனும்பொறிபுலத்தின்கோள்களளைவனைந்து
தள்ளரிய உணவுமுதற் பொருள்களெலாம் மெமக்குத்
தந்திடுவா யெனவந்து தொந்தரைசெய் திடுமால்
பள்ளமிசை வெள்ளமென பார்த்தருள்வாய் கடைக்கண்
பார்வதியின் மக்களினற் பக்கமதி லிருந்தே
விள்ளரிய சிவகாமி வல்லியவ ளோடும்
மேலாதி சிதம்பரத்தே வெளிநடன மிடுவோய் 89

நடனமதை முதற்படைப்பின் நாளினுக்கு முன்பே
நடத்திஉயிர் அனைத்தினிலும் நாடுமல மோட
உடல்கரணம் வினையொழியும் உலகமொடு போகம்
உவந்தளித்து மாயையையும் ஒழிக்கு நடராஜர்
படருறுநற் றென்னையெலாங் கற்பகமே போல
பயன்கொடுக்கும் ஆதிசிதம் பரமெனுந் தேவுலகில்
கடமையொடும் வசிப்பவர்கள் இந்திரனே போல
கருதுபயன் உற்றிருமை கதியதுபெற்றுரே. (90)

## வெண்டளை கோச்சகக் கலிப்பா

பெற்ற பெருவாழ்வே பேணியநற் பேறுடையாய்
கற்றவர்கள் உள்ளில் கனியுங் கவிச்சுவையே
பற்றுடைய தில்லைப் பழம்பதியாய் நாயடியேன்
குற்றமெலாம் நீக்கி குணங்கொண் டருள்வாயே. (91)

வாயினிக்கு நாவினிக்கும் வாழ்த்தும் மன மினிகு ம்
ஆயினிக்குங் கண்டும்அமிர்தமும்பின் னிட்டோட
தாயினுக்கு மேலாந் தயவுடையான் காரைக்கால்
பேயினுக்கா யாடுதில்லை பெம்மானைப் பேசிடினே (92)

பேசுதனின் பேரே பிணிப்பதுநின் பேரடியே
பூசுதனின் பூதியதே பூண்பதுநின் பொன்மணியே
தேசுபெறச் சேர்தனுன்றன் சீரடியார் சேர்க்கையதே
மாசகன்றுய் வாழ்தல்தில்லை மாவனமாம் வாழ்வார்க்கே(93)

கேட்டால் செவிகுளிரும் கிட்டினர்க்கிங் குள்குளிரும்
பாட்டாரச் சொல்லிப் படித்தார்க் குடல்குளிரும்
தேட்டான ஆதி சிதம்பரத்தாய் நாயேனுன்
தாட்டா மரையடியே தான்புகழ வேண்டுவனே. (94)

வேண்டார் உலகமதை மெய்யறிவின் நல்லோர்கள்
ஆண்டாய் உனதடியில் அன்புவைத்தா ராதலினால்
தூண்டா மணிவிளக்கின் சோதியே தில்லைவனம்
நீண்டாய் குறுகாத நேயமெனக் கீந்தருளே (95)

ஈந்தாய் உலகமதை எவ்வுயிர்க்கு மென்னினு நீ
போந்தாய் இரப்பதற்கும் பூங்கழல்கள் பூவணைய
வேந்தாய் வருபவர்கள் மேற்பணிசெய் தில்லைவனத்
தேந்தால் உனைவணங்கு மின்பமேபேர் இன்பமதே (96)

இன்பம் பெறினுமனர் என்னும் பொருள்பெறினும்
துன்பம் படவறமே துன்னுந் தவம்பெறினும்
அன்பங் குடையவராய் ஆதி சிதம்பரத்தாய்
உன்பக்க மில்லார் உயர்வோர் உயர்வாமோ (97)

வாய்புகழத் தந்து வணங்கவுடல் தந்ததுபோல்
தாய்புரியும் அன்பினையுந் தந்தாள்வாய் தில்லைவன
வேய்புரியும் சோழிபங்கா விண்ணோர்கள் சேவைசெய்தும்
சேய்புதுத வாதவூர் தேசிகன்முன் சென்றனனே (98)

சென்றேநீ ஆதி சிதம்பரத்தி லாடியதை
நன்றாகக் காணவந்த நாயேற் கருளாமல்
குன்றாடும் பிள்ளை குதித்தாடும் வாகனத்தின்
பொன்றாத ஆட்டில் புலங்கொண் டிருந்திடலே (99)

கொண்டிருப்பே னுள்ளுன் குணமார் திருவடியே
கண்டிருப்பேன் தில்லைக் களியிற் விளையாட்டே
அண்டர்பிரான் மக்களெல்லாம் ஆயுளொடுஞ் செல்வமொடும்
உண்டுடுக்கச் செய்தே உணர்த்துன் திருச்சீரே (100)

சுபம். திருச்சிற்றம்பலம்.

